**NOVEMBER/DECEMBER 2024**

**23UFTA15/23IFTA15 — தமிழில் சிறார் இலக்கியம்**

Time : Three hours Maximum : 75 marks




பகுதி அ — (10 × 2 = 20 மதிப்பெண்கள்)

அனைத்து வினாக்களுக்கும் விடையளிக்க.

1. சிறார் இலக்கிய நாவல்கள் எத்தனைப் பக்கங்களைக் கொண்டனவாக அமையும்?

2. குழந்தை எழுத்தாளர் சங்கம் யாரால் எப்போது நிறுவப்பட்டது?

3. தமிழில் குழந்தைகளுக்கான முதல் கலைக் களஞ்சியத்தின் முதன்மை ஆசிரியர் யார்?

4. சிறார் இலக்கியங்கள் சங்க இலக்கியங்களில் இருந்து தொடங்குவதாகக் குறிப்பிடுபவர் யார்?

5. தமிழக அரசின் சிறந்த திரைப்படக் கதாசிரியர் விருதைப் பெற்ற சிறார் இலக்கிய எழுத்தாளர் யார்?

6. 'ஆயிஷா' எனும் சிறார் குறுநாவலின் ஆசிரியர்?

7. தமிழ்நாடு அரசின் பரிசுபெற்ற பூவண்ணன் சிறுகதை நூல் எது?

8. ‘பொன்னியின் தியாகம்’ எனும் சிறார் நாடகத்தின் ஆசிரியர் யார்?

9. தமிழ் சிறார் இலக்கிய எழுத்தாளர் பெயர்களில் இருவரைக் குறிப்பிடுக.

10. ‘ஆழ்கடல்’ குறித்து அறிவுசார் புனை கதைகளை எழுதி வெளியிட்டவர் யார்?

பகுதி ஆ — (5 × 5 = 25 மதிப்பெண்கள்)

அனைத்து வினாக்களுக்கும் விடையளிக்க.

11. (அ) சிறார் இலக்கிய வளர்ச்சி குறித்து எடுத்துரைக்க.

(அல்லது)

(ஆ) குழந்தை எழுத்தாளர் சங்கம் மற்றும் தோற்றம் வளர்ச்சிப் பணிகளை எடுத்தியம்புக.

12. (அ) சிறார் உளவியல் சார்ந்த படைப்புகள் குறித்து எழுதுக.

(அல்லது)

(ஆ) இரா. நடராஜனின் ஆயிஷா நாவல் வழி சிறாரின் உளவியலைப் புலப்படுத்துக.

13. (அ) மொழிபெயர்க்கப்பட்ட சிறார் இலக்கியங்கள் குறித்து எடுத்துரைக்க.

(அல்லது)

(ஆ) இன்றைய சூழலில் சிறார் இலக்கியங்களின் போக்கு குறித்த கருத்துகளை எடுத்துரைக்க.



14. (அ) சிறார் இலக்கியங்களில் அரசின் பங்களிப்புக் குறித்து எழுதுக.

(அல்லது)

(ஆ) ‘வாண்டு மாமா’-வின் சிறார் இலக்கியப் பணி குறித்து எழுதுக.

15. (அ) சிறார் இலக்கியங்களில் சித்திரங்கள் முக்கியப் பங்காற்றுவது குறித்து எழுதுக.

(அல்லது)

(ஆ) “வண்ணப்படமும் – சிறார் கதைகளும்” குறித்த கருத்துக்களை எடுத்துரைக்க.

பகுதி இ — (3 × 10 = 30 மதிப்பெண்கள்)

எவையேனும் மூன்று வினாக்களுக்கு விடையளிக்க.

16. சிறார் இலக்கியத்தின் தோற்றமும் வளர்ச்சியும் குறித்து விவரிக்க.

17. சிறார் இலக்கியப் படைப்புகளும், அவற்றிற்கு வழங்கப்பட்ட விருதுகள் குறித்தும் தொகுத்துரைக்க.

18. சிறார் இலக்கியத்தின் உள்ளடக்க தன்மைகள் குறித்து விவரிக்க.

19. பூவண்ணனின் இலக்கியப் பணி குறித்து ஆராய்க.

20. வாழ்வியல் சார்ந்த சமூக மதிப்பீடுகளைச் சிறார் இலக்கியத்தின் வழி ஆராய்க.

———————